# நூல் விளக்கம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | பகுத்தறிவும் பரிணாமமும் |
| தொகுப்பாசிரியர் | : | சுவாமி பிரபஞ்சநாதன் |
| மொழி | : | தமிழ் |
| வகை | : | தொகுப்பு |
| முதற்பதிப்பு | : | *2021* |
| நூலின் அளவு | : | டெம்மி |
| பக்கங்கள் | : | *24* |
| தாள் | : | *A5 (5.83" X 8.27")* |
| எழுத்து அளவு | : | *12* புள்ளிகள் |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| கட்டமைப்பு | : | சாதா பைண்டு அட்டை |
| கணினி அச்சு | : | ஓம் கிராபிக்ஸ் |
| விலை | : | அகவிழிப்பு |

ஸ்ரீ குருப்யோ நமஹ

# பகுத்தறிவும் பரிணாமமும்




## சுவாமி பிரபஞ்சநாதன்

# பகுத்தறிவும் பரிணாமமும்

## என்னுரை

அகண்ட சக்ஷிதானந்த ஸ்வரூபமாகிய அந்த பரிபூரண பரமானந்த இருப்பு ஒன்று மட்டுமே என்றும் இருக்கிறது. எல்லையில்லாத அந்த ஆனந்த அறிவு அணுவுக்குள் அணுவாகவும், பிருஹத்துக்கு பிருஹத்தாகவும் இருக்கிறது.

**‘அணு’** என்றால் புலன்கலுக்கு புலப்பட முடியாத மிகமிகச் சிறியது என்றும், **‘பிருஹத்’** என்றால், மிக, மிகப்பெரியது என்றும் பொருள்.

சாஸ்திரங்களின் உபதேசம் எல்லோருக்கும் ஒன்று போலவே உபதேசிக்கப்பட்டாலும், அவைகள் மாணவர்களின் (சிஷ்யர்களின்) பக்குவத்தைப் பொறுத்தே ஒவ்வொருவரும் அதனால் பிரயோஜனம் அடைகிறார்கள்.

அந்தவகையிலே, சனாதன தர்மம் என்ற மிகப்பெரிய ஆலமரத்தின் அழகான கிளைகளாக உள்ள உபநிஷதங்களில் வருகின்ற உபதேசப்பகுதிகளில், தேவராஜாவான **இந்திரன்,** அசுர ராஜாவான **விரோசனன்** ஆகிய இருவருக்கும் பிரஜாபதி என்ற குருவானவர் பாடங்களை உபதேசிக்கும்பொழுது,

**"கண்ணினால் எவன் பார்க்கிறானோ அவனே ஆத்மா"** என்று ஒரே வரியில் உபதேசத்தைச் செய்கிறார்.

கண் முதலான புறக்கரணங்கள், மனம் முதலான அகக்கரணங்கள் ஆகிய எல்லாவற்றுக்கும் பின்னால், அவற்றுக்கு ஆதாரமாக இருக்கிற ஒரு வஸ்துவை அவர் இப்படி மறைமுகமாக குறிப்பிட்டார்.

ஆனால் இதை சரியாகப்புரிந்து கொள்ளாமல் அவர்கள் இருவரும் தங்களைத் தாங்களே கண்களால் பார்த்துக் கொள்ளும்படியாகத் தோன்றும் தங்களுடைய பிரதி பிம்பங்களையே "**ஆத்மா**" என்று அர்த்தம் பண்ணிக் கொள்கிறார்கள்.

பிரதிபிம்பத்தில் சரீரம் தானே தெரிகிறது?

அதனால் சரீரமே '**ஆத்மா**' என்று விரோசனன் முடிவாகத்தீர்மானம் செய்து விடுகிறான். அதிலிருந்து நாஸ்திகவாதம், லோகாயதம், போன்றவைகளில் எல்லாம் ஈடுபாடு உண்டாகி, அவைகள் அசுரர்களின் கொள்கையாகி விடுகிறது.

இந்திரனும் முதலில் சரீரத்தையே '**ஆத்மா**' என்று தவறாகப் புரிந்துக் கொண்டாலும், அதன் பிறகு அவன் தன் விவேகத்தைக் கொண்டு விசாரித்து, பிருகு முனிவர் எவ்வாறு, தனக்கு கிடைத்த பகுத்தறிவைக் கொண்டு, இந்த உடலாகிய அன்னமயகோசத்திலிருந்து ஒவ்வொன்றாகப் பகுத்துப் பார்த்து,

இறுதியில் ஆனந்தமயகோசம் எப்படிப்பட்டது, என்பதை அறிந்துக் கொண்டதுப் போன்றே, இங்கே இந்திரனும் ஸ்தூல தேகத்திலிருந்து சூக்ஷும தேகமான கனவு சரீரம், அதன்பிறகு கனவுகளும் இல்லாமல் ஆழ்ந்து தூங்குகிற காரண சரீரம் முதலான ஆனந்தமயகோஷம் வரை ஆராய்ந்து, அந்த அறிவை அறிந்துக் கொண்டு, "**அதுவே நான்**" என்று தெரிந்து கொள்கிறான்.

பிருஹதாரண்ய உபநிஷத் என்றால், மிகப்பெரிய வனம் என்று பொருள். அதாவது, '**ஆரண்யம்**' என்றால் "**வனம்**", '**பிருஹத்**' என்றால் "**மிகப்பெரியது**". அதனால், இது '**மிகப்பெரிய வனம்**' என்பதாக இந்த பிருஹதாரண்ய உபநிஷதம் உள்ளது. உபநிஷத்துக்களுக்குள் மிகப்பெரியது பிருஹதாரண்யகம்.

இதில் மொத்தம் ஆறு அத்யாயங்கள். முதல் இரண்டை மது காண்டம் என்றும், அடுத்த இரண்டை யாக்ஞவல்கியர் பெயரில் முனி காண்டம் என்றும், கடைசி இரண்டைக் கில காண்டம் என்றும் சொல்வார்கள்.

மது என்றால் ஆனந்தரஸம் என்று பொருள். அதாவது, எல்லாம் எல்லாம் பரமாத்ம ஸ்வரூபம் என்று தெரிந்து கொண்டால், இந்த உலகம் முழுவதும், ஜீவர்களுக்கு மதுவாக இருக்கும். ஜீவர்களும் உலகத்திற்கு மதுவாக இருப்பார்கள். ஆத்மா அனைத்திற்கும் மது. இந்த விஷயம் மது காண்டத்தில் வருகிறது.

பிறகு இதே உபநிஷதத்தில்தான் (iv.4.22) ஆத்மா இப்படி இல்லை, இப்படி இல்லை என்று தள்ளித்தள்ளி, அதை இப்படித்தான் இருக்கிறது என்று கூறவே முடியாது. நமக்குத் தெரிந்த எதுவாகவும் அது இல்லை என்று கூறியிருக்கிறது.

இதற்கு "**நேதி நேதி**" வாதம் என்று பெயர். "**ந இதி**" என்பது ஸந்தியில் "**நேதி**" என்றாகும். "**ந இதி**" என்றால் '**இவ்வாறு என்று சொல்வதற்கு இல்லாதது**' என்று அர்த்தம்.

முதலில் இப்படி 'நேதி' கொள்கைப்படி பிரபஞ்சம், சரீரம், மனஸ் எல்லாவற்றையும் தள்ளிவிட்டுத்தான் வர்ணனாதீதமான ஆத்மாவை அறிந்துகொள்ள வேண்டும். அப்படி அறிந்து கொண்டதற்குப் பின் விவகாரத்தில் தோன்றுகிற இந்த **உலகம், ஜீவர்கள்** எல்லாமும்கூட அதே ஆனந்த ரஸத்தால் ஆனதுதான் என்ற பாவம் உண்டாகும்.

இதே பிருஹதாரண்ய உபநிஷதத்தின் ஒரு பகுதியாக யாக்ஞவல்கியரின் இரண்டு மனைவிகளில் ஒருத்தியான காத்யாயனி சாதாரண உலகியல் ஆசைகள் உள்ள பெண்ணாகவும், மற்றொருத்தியான மைத்ரேயி என்பவள் பிரம்மவாதினியாகவும் இருந்ததை, இந்த உபநிஷத்து மூலம் அறியலாம்.

யாக்ஞவல்கியர் மைத்ரேயிக்குப் செய்த உபதேசம் இந்த உபநிஷத்தில் **மதுகாண்டம், முனிகாண்டம்** இரண்டிலும் (2ம் அத்யாயம் 4ம் பிரிவிலும், 4ம் அத்யாயம் 5ம் பிரிவிலும்)

சிறிது வித்தியாசத்தோடு கூறப்படுவது, மிகவும் அழகான கதையும், தத்வமும் சேர்ந்ததாக இருக்கிறது.

யாக்ஞவல்கிய முனிவர் சந்நியாஸியாகப் போவதற்கு முடிவு செய்துவிட்டு, தன்னுடைய இரண்டு மனைவிகளுக்கும் தமது சொத்தைப் பிரித்துக் கொடுக்கிறார்.

அதிலே, காத்யாயனி அந்த சொத்திலேயே திருப்தி அடைந்து விடுகிறாள்.

ஆனால் மைத்ரேயியோ, இந்த சொத்திலெல்லாம் இல்லாத சந்தோஷம் அந்த சந்நியாஸத்தில் இருக்கிறது என்பதால்தானே இதையெல்லாம் விட்டு, விட்டு அதற்குப் போகிறீர்கள்? அப்படிப்பட்ட அந்த சுகமான சந்தோஷம் என்ன? அதை எனக்கும்தான் எடுத்துச் சொல்லுங்களேன்! என்று கேட்கிறாள்.

அதற்கு யாக்ஞவல்கியர், மிகவும் மனம் மகிழ்ந்து, எப்போதுமே எனக்கு பிரியமானவளாக ஆகிவிட்டாய்! என்று சொல்லி, உபதேசிக்க ஆரம்பிக்கிறார்.

இந்தப் “**பிரியம்**” என்பது என்ன என்பதையே மிகவும் தத்வார்த்தமாக விவரிக்கிறார்.

கணவனிடம் மனைவிக்குள்ள பிரியமும், மனைவியிடம், கணவனுக்குள்ள பிரியமும், அதுப்போன்றே, குழந்தைகள் இடத்திலுள்ள பிரியமும், செல்வங்களிடத்தில் உள்ள பிரியமும்,

எல்லாவிதமான பிரியங்களுமே எதனிடம் செலுத்தப் படுகின்றனவோ அந்தக் கணவன், மனைவி, மக்கள், செல்வம், போன்ற விஷய சுகங்கள் எல்லாமே இவைகளின் பொருட்டாக உண்மையில் உண்டாவதாக நினைத்துக் கொண்டு, இப்படிப் பிரியமாக இருப்பதால், தன்நிறைவு ஏற்படுகிறதல்லவா?

அந்த தன் நிறைவான திருப்தி, சந்தோஷம் தனக்கு (ஆத்மாவுக்கு) உண்டாகிறது என்பதினால்தான் எதனிடமும் பிரியத்தைச் செலுத்துகிறான். அவ்வாறு தன் ஆத்மாவுக்கு இது சந்தோஷம் உண்டாக்குகிறது என்றால், அந்த ஆத்மா அன்பு ஸ்வரூபமாக இருக்கிறது என்பதுதானே அர்த்தம்?

அதை மட்டும் பிரித்துத் தெரிந்து கொள்வதற்காகத்தான் அதுவரை பிரியமாக இருந்த எல்லாவற்றையும் விட்டுவிட்டு, சந்நியாஸியாகப் போவது.

அவ்வாறு அதைத் தெரிந்து கொண்டபின், அதற்கு அந்நியமாக எதுவுமே இல்லை என்று ஆகிவிடும்.

எல்லாமும் பிரியமானதாகிவிடும்.

முதலில் சிலவற்றில் '**பிரியம்**' வைத்தபோது, அதற்கு மாறான வேறு சிலவற்றில் "**அப்ரியம்**" என்று இருந்தது. அதாவது, திருப்தி இல்லாமல் இருந்தது.

இவை எல்லாவற்றையும் விட்டு விட்டு, ஆத்மாவைத் தெரிந்து கொண்டு விட்டால் ஏற்றத்தாழ்வில்லாமல், எல்லாமே

ஆத்ம ஸ்வரூபம் என்ற உணர்ச்சி ஏற்பட்டு, சிலவற்றில் மட்டுமின்றி, எல்லாவற்றிடமும் வெறுப்பு இல்லாமல், எல்லாமே விருப்பமானதாக (ப்ரியமானதாக) மாறிவிடும் என்று உபதேசம் செய்கிறார்.

அந்த வகையிலே, இந்த சாஸ்திர விஷயங்களை அறிய ஆர்வம் கொண்ட, மாணவர்களின் மத்தியிலே, அவர்களது "**மனம்**" எவ்வாறு படிப்படியான மாற்றத்தை அடைந்து, புத்தி சக்தியாக பரிணமித்து, இதுப்போன்ற பாடங்களை படித்து புரிந்துக் கொள்ளக்கூடிய பக்குவத்தைப் பெற்றுள்ளது என்பதைப் பற்றி அறியும் விதமாக "**பதஞ்சலி யோக சூத்திரம் - விபூதி பாதம்**" என்ற நூல் "**பரிணாமம்**" பற்றி பல சூத்திரங்களாக விவரிக்கிறது.

அந்த நூலுக்கு விளக்கஉரை எழுதத் தொடங்கியதின் விளைவாக, "**பரிணாமம்**" பற்றிய பலவாறான விளக்கங்களை இன்னும் சற்று விரிவாக, விவரிக்க வேண்டிய கட்டாயத்தின் காரணமாக, இந்த "**பகுத்தறிவும் பரிணாமமும்**" என்ற இந்த நூல் உண்டானது.

நன்றி!

என்றும் அன்புடன்,

**சுவாமி பிரபஞ்சநாதன்.**

# பகுத்தறிவும் பரிணாமமும்

ஒன்றின் படிப்படியான மாற்றத்தை '**பரிணாமம்**' என்பதினால், மனித இனம் அறியாமையில் ஆதிமனிதனாக இருந்த நிலைமாறி, இன்றைய விஞ்ஞான அறிவு மேலோங்கிய, விவேகத்தை அடைந்து, ஆறாம் அறிவுப் பரிணாமத்தின் பகுத்தறிவுப் பாதையில் பயணிக்கத் தொடங்கியதற்கு, தொடக்கமாக எது இருந்தது?

இந்தப் படிப்படியான பரிணாம மாற்றம் பல்வேறு சீவர்களின் மத்தியில் மனிதர்களுக்கு மட்டும் இந்த பகுத்தறிவு என்ற பயனுள்ள புத்தி சக்தியாக எப்படி பரிணமித்தது?

அந்த புத்தி சக்தி எல்லா மனிதர்களுக்கும் ஒன்றுபோல ஒரே மாதிரியாக உள்ளதா? அது அனைவருக்கும் ஒன்றுபோல, ஒட்டு மொத்தமாக வந்து விட்டதா? என்று ஆராய்ந்துப் பார்த்தால், அப்படி நிச்சயமாக கிடையாது என்பதை, நம்மிடையே வாழுகின்ற மற்ற மனிதர்களைக் கொண்டு, நாம் நன்றாக ஒப்பிட்டு அறிந்துக் கொள்ளலாம்

இதை முதன்முதலாக டார்வின் என்ற அறிஞர் 1859 - ம் ஆண்டு, உயிரினங்களின் தோற்றம் குறித்த தனது **"The Origin of Species by Natural Selection"** என்ற புத்தகத்தில்

தனது பரிணாம கோட்பாடு மூன்று அம்சங்களைக் கொண்டதாக வெளியிட்டார்.

1. **மாறுபாடு.**

   (எல்லா உயிரினங்களிலும் காணப்படுவது)

2. **மரபு வழி.**

   (ஒத்த உயிர் வடிவத்தை (பரமாணுவை) ஒரு தலைமுறையிலிருந்து, இன்னொரு தலைமுறைக்கு எடுத்துச் செல்லும் ஆற்றல்)

3. **உயிர் வாழ்தலுக்கானப் போராட்டம்.**

   (எந்தெந்த மாறுதல்கள் ஒரு குறிப்பிட்ட சூழலுக்குச் சாதகமாக இருக்கும் என்று கணித்து, அதற்கேற்ப இனப்பெருக்க முறைகளை சரியாகத் தீர்மானித்து, உயிரினங்களில் உடல் மாறுதல்களை உண்டாக்கிக் கொள்வது)

இந்த பரிணாமக் கோட்பாடுகளை இன்றைய விஞ்ஞான உலகம், அதன் நீட்சியாக பரம்பரை மரபியல் குணங்களின் இயல்பினைப் பற்றி நமக்கு விளக்கம் தருகிறது.

இதை '**நவீன டார்வினியம்**' என்கிறார்கள்.

ஒரு உயிர் வாழ்தலுக்கான போராட்டம் என்பது தனித்தனியான பொருளைப் பொறுத்தது மட்டுமல்ல. தன் இனத்தை உற்பத்தி செய்து, இனவிருத்தி செய்யும் (**குணம், உடல்வாகு, நிறம், திறமை, அறிவு** இவைகளையும் சார்ந்தது) சக்தியைப் பொறுத்ததாகும் என்பது, நவீன டார்வினியமாகும்.

இன்றைய, நவீன அறிவியலின் '**விஞ்ஞான தத்துவம்**' இவ்வாறு இருக்கும் பட்சத்தில், அன்றைய பண்டைய அறிவியலின் '**மெய்ஞ்ஞான தத்துவம்**' எவ்வாறு இருந்தது? என்பதையும் அறிந்துக் கொள்ள வேண்டும்.

இந்தியத் தத்துவங்களில் மிகவும் பழமையானதும், சிறப்பானதும், முன்னோடியுமான தத்துவம் "**சாங்கியம்**" எனலாம்.

இது, **பிரகிருதி** (இயற்கை), **புருடன்** (அறிவுள்ள பொருள்) ஆகிய இரண்டைப்பற்றி மட்டுமே பேசுகின்ற சடவாத தரிசனமாகும்.

இதில் கூறப்பட்ட உலகத்தோற்றம் (படைப்பு) குறித்தான கருத்துக்களை மட்டும், '**அத்வைத வேதாந்திகள்**' ஏற்றுக் கொள்கின்றனர்.

அதாவது, **புருடன்** - அறிவுள்ள பொருள் என்றும், **பிரகிருதி** - அறிவற்ற சடப்பொருள் என்றும் கூறுகின்றது.

உலகமானது முக்குணங்களின் சேர்க்கையினால் உருவானது என்பது இதன் கருத்து.

இந்நூலில் தத்துவ விசாரணைகள் அதிகம் உண்டு.

ஆதியில் **பிரகிருதி**, பிறகு **மகத்,** பிறகு **அகங்காரம்,** அதன்பிறகு, ஐந்து தன்மாத்திரைகள், ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள், மனம், ஐந்து ஸ்தூல பஞ்சபூதங்கள், ஐந்து சூக்கும பஞ்சபூதங்கள், இறுதியில் புருடன் எனும் 28 சாங்கியத் தத்துவத்தில் படைப்பு பற்றி, இவ்வாறு விளக்கமாக கூறுகிறது.



மேலும், “மூலத்திற்கு மூலம் இல்லையாதலால், அதற்கு ‘**அமூலம்**’ எனப்பெயர்”.

மாறுதல், இயக்கம் இவைகளை ஏற்றுக்கொண்ட சாங்கியவாதிகள் கண்களுக்குப்புலனாகும் இந்த உலகத்திற்கு அடிப்படையாக இருப்பது “**பொருள்**” மட்டும்தான் என்கின்றனர். ஆகவே, “**புருசன்**” உலகத் தோற்றத்திற்கான காரணமல்ல என்பது பூர்வ சாங்கியவாதிகளின் கூற்று.

தொடக்ககால சாங்கியத்தில் ஆன்மீகத்தின் சாயல் துளிக்கூட காணப்படவில்லை. சாங்கியத் தத்துவத்தின்படி எல்லா மாறுதல்களுக்கும், அடிப்படைக் காரணமாக இருப்பது, **பொருள்களின் முதன்மைத் தன்மைதான்** என்று பூர்வ சாங்கியர்கள் விளக்கினார்கள்.

இங்கு முதன்மையானது ‘**பொருள்**’ மட்டுமே.

முதலில் உருவான பொருள், **பிரகிருதி** என்று, அந்த பொருளின் முதன்மைத்தன்மையை விளக்கும் சாங்கியக் கொள்கை ‘**முதன்மை காரண வாதம்**’ எனப்பட்டது.

இதில், “**பொருள்**” முதன்மையானதாகவும், “**புருஷன்**” இரண்டாவதாகவும் உள்ளதினால், இதனை “**முதன்மை காரண வாதம்**” எனப்பட்டது.

இதில், மூல சாங்கியத்தில் கூறப்பட்ட ‘**புருசன்**’ என்பது, முதன் முதலான பொருளின், அதாவது அந்த மூலப்பொருளின் (அணுவின்) பெருக்கம்தான் எனக் கூறப்பட்டது.

அதாவது, மூலப்பிரகிருதி இயக்கமுற்று, பலவாறாக வளர்ச்சியடைவது, உருவ மாற்றத்திற்கு உட்படுவதுதான் “**புருசன்**” என்கின்றனர் சாங்கியவாதிகள்.

மேலும், தொடக்க காலத்தில் சாங்கியர்களால், “**புருசன்**” என்ற சொற்பதத்திற்கு **முதன்மையற்றது, இரண்டாவதானது,** என்ற பொருளில் அறியப்பட்டது..

இதனை **பிரதானம், பரிணாமம், புருஷ பஹுத்வம்** என்று அழைக்கப்பட்டது.

இவ்வாறு, தன்நிறைவு கொண்ட, இயங்கியல் தன்மை கொண்டதான, முதல் நிலைப்பொருளாக (அணுவை) அனைத்தையும், அதுவாகவே கண்டுகொண்ட நிலையில், இரண்டாவதாக உள்ள புருஷனை ஏற்கவேண்டிய தேவை ஏன் சாங்கியவாதிகளுக்கு வந்தது என்றால், அதற்குக்காரணம், அவர்கள் வேதாந்தவாதிகளை மறுக்கும் நோக்கத்தில் புருஷன் என்பதை இரண்டாவதாக ஏற்றுக் கொண்டனர்.

இவர்களுக்கு நேர்மாறாக, வேதாந்தத்தில் உலக நிகழ்ச்சிகள் அனைத்தும் ‘**மாயை**’. புருசன் மட்டும்தான் இறுதியான “**உண்மை**” என்று கூறப்பட்டது.

அதாவது, “**பிரம்மம் சத்தியம், ஜகத் மித்யா**” என்ற மகாவாக்கியம் உண்டானது. இதை பிரம்மவாதம். அதாவது, “**பிரம்ம காரண வாதம்**” எனப்பட்டது.

மேலும், இது அனைத்தும் உணர்வின் சாராம்சமே. உலகத் தோற்றத்திற்கான முதற்காரணமாக உள்ளது “**பிரம்மமே**” என்றது பிரம்மவாதம்.

எனவே, சாங்கியர்களின் ‘**அசேதன காரண வாதத்திற்கும்**’, வேதாந்திகளின் ‘**சேதன காரண வாதத்திற்கும்**’ உள்ள தத்துவப் போராட்டத்தை சாங்கியத்திற்கும், வேதாந்தத்திற்கும் இடையே உண்டான மோதலில் காண முடிகிறது.

ஆதாவது, ‘**அசேதனம்**’ என்றால், “**மூலப்பிரகிருதி**” எனவும், ‘**சேதனம்**’ என்றால், “**பிரம்மம்**” அல்லது ‘**புருஷன்**’ எனவும் அறிய வேண்டியுள்ளது.

மேலும், முதன்மையற்ற, இரண்டாந்தரமாக உள்ள ‘**புருஷ்**’ பலவாகும் என்று சாங்கியம் கூறியது.

அதற்கேற்ப, வேதாந்தமும் தனது கருத்து முதல்வாத நிலையில் விளக்கும்போது, **சத்துவம், ராஜசம், தாமசம்** என்று புருஷ குணங்களை வகைப்படுத்தி பலவாக்கின.

இந்நிலையில், புருசனை முதன்மைப்படுத்தி உண்டானது "**புருஷசூக்தம்**" ஆகும். வேதாந்தத்தில் சங்கரரும், மத்துவரும் தோன்றி, மேலும் இதனை வலிமைப்படுத்தினார்கள்.

சங்கரர் '**பிரம்ம ஞானம்**' ஒன்றே இறுதி நிலை என்றார். அவர் மேலே கண்ட சாங்கியக் காரிகையின் கூற்றை, தான் எழுதிய பிரம்ம சூத்திரத்தில் எடுத்தாள்வதுடன், புருஷனின் உயர்ந்த இறுதிநிலை கட்டத்தை (புருஷார்த்தசித்தி) கருத்து முதல் வாதத்துக்கு உரியதாக மாற்றி அமைத்துக் கொண்டார்.

உலகப்படைப்பு மற்றும் சீவராசிகளின் தோற்றம் குறித்தான சாங்கிய சிந்தனைகள் அதிகமாக **உபநிடதம்** மற்றும் **பகவத் கீதையில்** கையாளப்பட்டுள்ளன. பகவத் கீதையில் '**சாங்கியம்**' என்பதற்கு "**ஞான யோகம்**" என்று பொருள்.

இப்படி, "**ஞானம்**" என்பது, மனித இனத்தின் பகுத்தறிவு சிந்தனைகளால், மாறுபாடுகளுக்கு உட்பட்டு, பல்வேறு படிநிலைகளின் பரிமாணங்களாக, "**ஸ்ருதி**" என்ற வேதத்தின் சாரமாக வெளிப்பட்டு, '**ஸ்மிருதி**' என்ற பலவாறான சாஸ்திரங்களை பல்வேறு அறிஞர் பெருமக்களால் (ஞானிகளால்) வெளிப்படுத்தப்பட்டன.

அத்தகைய சாஸ்திரங்களில் ஒன்றாகத்தான் "**பதஞ்சலி முனிவரின் யோக சூத்திரம்**" என்ற சாஸ்திரமும் அடங்குகின்றது.

இத்தகைய பலவாறான சாஸ்திரங்கள் அன்றைய மனிதர்களின் தேவைகளைக் கருத்தில் கொண்டு, அந்த, அந்த காலகட்டங்களில் உண்டானதாக உள்ளது.

அத்தகைய சாஸ்திரங்களில் கூறப்படுகின்ற ஆழமாக பொருளை அறிந்துக் கொள்ளக்கூடிய அறிவாற்றல் என்பது, அனைவருக்கும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை என்றாலும், இவர்கள் எல்லோரிடத்திலும் மாறாத ஒன்று தன் நிறைவாய், தன் இயல்பாய் இருக்கும் அதை, அனைவருமே அனுபவத்தில் அறிய முடிவதில்லை என்பது உண்மையாக இருப்பினும், அந்த எதார்த்த நிலையின் இயல்பாய் இருக்கும், '**உண்மை**' (சத்தியம்) என்றும் மாறாதது என்பதினால், அந்த சத்தியத்தை '**இருப்பு**' என்றும், '**ஆன்மா**' என்றும், '**இறைவன்**' என்றும், "**பிரம்மம்**" என்றும் பலவாறாக போற்றப்பட்டன.

அத்தகைய உண்மை (சத்தியம்) "**இருப்பு**" கொண்டுள்ள இருப்பிடம் இந்த '**பிரகிருதி**' என்றாலும், '**புருஷன்**' என்றாலும், அதை அறியக்கூடிய "**அறிவு**" ஒன்றே எல்லாமாக இருக்கிறது என்பதினால், "**அதுவே நான்**", "**நானே அது**" என தன்னையறிந்து, தன்மயமாதலே, அறிதலில் மிக உயந்த ஞானமாகிய '**தலையாய ஞானம்**' என்கின்றது ஸ்ருதி.

அந்தவகையிலே, இந்த பஞ்ச பூதங்களுக்கு உட்பட்ட பரு உடல்களில், ஒரு அறிவு கொண்ட தாவரங்கள் முதல், ஆறு அறிவு கொண்ட மனிதர்கள் வரை, எதுவாக

இருந்தாலும், அவைகளுக்கு ஆதாரமான மூலப்பொருளாகிய ஒரு “**அறிவுப்பொருள்**” (அணுப்பொருள்) அவசியம் இருந்தாக வேண்டும்.

பொதுவாக, நம் கண்களுக்குத் தெரிகின்ற ஸ்தூலத்தில், கால, தேசங்களுக்கு உட்பட்ட உருவத்தில், பலவாறான மாறுதல்களுக்குட்பட்டு, பல பரிமாணங்களில் வெளிப்பட்ட, ஸ்தூலப் பொருள்களைக் காணும் பொழுது, அதற்கு ஆதாரமான ஒரு சூக்ஷும பொருளை அறிய முடியாமல், அறியாமையில் உள்ள மனம் பலவாறான சிந்தனைகளினால் சிதறுண்டு கிடக்கிறது.

பொதுவாக, நம் கண்களுக்குத் தெரிகின்ற ஸ்தூலப் பொருள்கள் எல்லாமே, அதற்கு ஆதாரமான சூக்ஷும பொருளில் இருந்து வந்தவைகள் ஆதலால், நாளடைவில் அவைகள் மீண்டும் சூக்ஷுமமான தங்கள் மூலத்திற்கே, திரும்பக்கூடிய நடைமுறை மாறுதல்களை மெல்ல, மெல்ல உணரக்கூடிய உணர்வு கூட இன்றைய மனிதனிடம் இல்லாத நிலையும் அதிகம் காணப்படுகிறது.

உதாரணமாக, தாவர உடல்களில் வெளிப்பட்ட தானியங்கள் காலப்போக்கில் பொடிப்பொடியாக சூரணம் ஆகி விடுவதும், அவ்வாறே பூச்சி, புழுக்கள் முதல் மனிதர்கள் வரை உள்ள பல்வேறு சீவராசிகளின் பரு உடல்கள் மெல்ல, மெல்ல தொய்வடைந்து, தளர்ந்து, வயதாகி வந்த, அந்த உடல் மண்ணோடு, மண்ணாக மக்கி, மண்(அணுத்)துகள்களாக மாறி, முழுவதுமாகவே அழிவுக்கு உட்படுவதைக் காணும்போது கூட,

அந்த ஸ்தூல உடல்கள் உண்டாவதற்கு ஆதாரமானது, சூக்ஷும பொருள் “**அணு**” என்பதை எல்லோராலும் ஏற்க முடியாதவாறு, மனம் மாயையினால் மயக்கமடைந்துள்ளது.

அவ்வாறு, அந்த அணுவில் இருந்து உண்டான படிப்படியான மாற்றங்களினால் வந்தவைகள் எல்லாமே, மீண்டும் அதே படிப்படியான மாற்றங்களினால் அதன் மூலத்திற்கே (அணுவாகவே) திரும்புவதையும், திரும்பிக்கூட பார்க்க முடியாத நிலைக்கு இன்றைய மனித சமுதாயம் பல்வேறு சமூக வலைத்தளங்களில் சிக்கி சின்னாபின்னமாகிக் கொண்டுள்ளது.

அதாவது, தோற்றத்திற்கு வந்தவைகள் எல்லாம் எந்த மூலத்திலிருந்து வந்ததோ, மீண்டும் அந்த மூலத்திற்கே அவைகள் திரும்புகின்றன என்பதை ஏற்றுக் கொள்ளக்கூடிய எண்ணம் எவருக்கு வருகிறதோ, அவரே மனிதப்பிறவியின் மகத்துவம் அறிந்து, மனதின் தோன்றும் எண்ணங்களை விசாரித்து விடைக்கண்டு கொண்டனர்.

அதன் விடையாக அவர்கள் அறிந்துக் கொண்டது, ‘**அது மட்டுமே இருக்கிறது**’. அதுவே, ‘**எல்லாமாக இருக்கிறது**’. அதுவே, சிறியதிலும் சிறியதான “**அணு**” என்றும், அதுவே, பெரிதிலும் பெரிதான “**வெளி**” என்றும் அறிந்துக் கொண்டனர்.

அந்த அணுவில் அணுவினை, அதிபிரானை, ஆயிரம் கூறிட்டு அணுக வல்லார்க்கு, அனைத்துமே அந்த அணுவின்

வெளி(ப்பாடு) என்றும், “**அதுவே நான்**”, “**நானே அது**” என்றும், எனவே, ‘**இருப்பதெல்லாம் இறைவனே**’ என்றும் அறிந்து, பஞ்சபூதங்களில் ப்ருத்வீ முதலான மஹா பூதங்களிலும், ஏனைய எல்லா சரீரங்களிலும், “**நானே இருக்கிறேன்**” என்றும், தனக்கு வேறாக எதுவுமே இல்லை என்றும், அறியும் பொழுது, அரிதான இந்த மனிதப்பிறவியின் மகத்துவத்தை அறிய முடிகின்றது.

அத்தகைய மனிதப்பிறவியில், இந்த கண்களுக்குத் தெரிகின்ற ஸ்தூல உடல் கொண்டு, கண்களுக்குத் தெரியாத சூக்ஷும “**மனம்**” தனது, படிப்படியான மாறுபாடுகளுக்குட்பட்ட பரிணாமத்தினால், “**புத்தி**” சக்தியாக மாறி, விழிப்புற்ற விவேகத்தைக் கொண்டு, அறிவுப் பரிமாணத்தின் அறுதி எல்லையான ஆறாம் அறிவு என்கிற ‘**பகுத்தறிவு**’ கொண்டு, மனதின் **நன்மை - தீமைகளை** விசாரித்து, எதன் மீதும், யார் மீதும் **விருப்பு - வெறுப்பு, உயர்வு - தாழ்வு, நல்லது - கெட்டது,** போன்ற இருமைகளற்ற இருப்பு நிலையில், ஒன்றேயான அந்த “**அறிவு**” (அணு) ஸ்வரூபமாகவே “**நான் இருக்கிறேன்**” என்று, தன் இயல்பை உணருகின்ற, அந்த உன்னத உணர்வே “**உயர் ஞானத் திறவுகோல்**” என்கின்ற ‘**சாவி**’ எனப்படுகிறது.

இந்த உயர் ஞானத்திறவுகோல் என்ற ‘**சாவி**’ கொண்டு, திறக்கப்பட வேண்டிய “**பூட்டு**” ஒன்று உண்டு என்றால், அதுவே. ‘**மனம்**’ என்று அறிவுறுத்துகின்றது சாஸ்திரம்.

அத்தகைய திறந்த மனதைக் கொண்ட மனிதர்கள் மட்டுமே, "**அதுவாகவே நான் இருக்கிறேன்**" (அஹம் ப்ரஹ்மாஸ்மி) என்று, அறியக்கூடிய, அந்த அறிவுக்கு ஆதாரமான அணுவை (ஆன்மாவை) அறிந்து, "**அது மட்டுமே இருக்கிறது**" என்றுணர்ந்து, இந்த உடல், மனம் போன்ற பஞ்ச கோஷங்கள் அந்த அறிவை மறைக்கின்றது என்பதை ஏற்றுக் கொண்டு, எல்லாம் வல்ல அந்த மூல அணுவை, பரமாணுவை பற்றிக்கொள்கின்றனர்.

இவர்கள் மட்டுமே என்றென்றும் இருக்கின்ற அந்தப் "**பொருள்**" பற்றிய அறிவை அறிந்து, அந்த அறிவாகவே மாறி, சாங்கியர்களின் "**பொருள்**" மட்டுமே முதன்மை என்னும் கோட்பாடான '**அசேதன காரண வாதத்திற்கும்**', வேதாந்திகளின் "**புருஷன்**" மட்டுமே முதன்மை என்னும் கோட்பாடான '**சேதன காரண வாதத்திற்கும்**' உள்ள இருமைகளில் இருந்து விடுபட்டு, ஒன்றேயான அந்த ஆன்மா(பரமாணு)வை பரம திருப்தியுடன் பலவாறாக அனுபவித்து மகிழ்கின்றனர்.

**ஓம் தத் சத்!**

